(கு-பு.)—
இது, ஜாலவிஷயமானதென்று தோற்றுகிறது. அகத்தியர் இயற்றிய தாகச் சொல்லப்படுகிறது. இந்தப் பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது.
இதன்பின்பு வெற்றேடு ஒன்றுள்ளது.

---

## (e-1) அகத்தியர் சவுக்காரத் திறவுகோல், பதினாறு.
## AHATTIYAR SAVUKKĀRAT TIṚAVUKŌL, PADINĀṞU.

Foll. 216*a*—220*a*.

Same work as that described under R. No. 192 (*m*) *ante*.

Complete.

(கு-பு.)—
இந்நூல், மூவருடத்திய காட்லாக்கின் 192(*m*) நம்பர் பிரதிபோன்றது இந்தப்பிரதியில் இது முற்றும் உளளது.

---

## (*f*-1) நந்திதேவர் வாதசூத்திரம், முப்பது.
## NANDIDĒVAR VĀDASŪTTIRAM, MUPPADU.

Foll. 221*a*—225*b*.

On the preparation of certain salts, soaps and other ingredients required for alchemy. The treatise is attributed to Nandiśvarar, and in the 4th stanza thereof, mention is made of his other works.

Complete in 33 stanzas.

**Beginning**:

பூரண மான பொன்னடி மூலங்
காரண மான கணபதி சத்தி
சாரணை மேலாய்ச் சார்ந்திடுஞ் சோதி
ஆரண ஞானத் தடிமுடி காப்பே. (க)

கார்ப்பது வீன(க்)கருணை யினாலே
கூர்ப்புடன் வாதக் குறிதெரிந் திட்டு
சேர்ப்பது வாதத் தெளிவு மு[ன்னூ](ந்நூ)ற[ா](ற)ப்
பார்ப்பவர்க் கல்லோ பலித்திடுஞ் சித்தியே. (உ)

சித்தியாம் [ன](ந)ந்தி தேவனென் றென்பேர்
அத்தனார் கூப்பிட் டருளினார் வாதம்
பெற்றதி னாலே பேரெனக் காச்சு
முத்தமி ழாலே மொழிந்த மு[ன்னூ](ந் நூ)றே. (ங)

மு[ன்னூரி](ந்நூ)(றி)ல் ஞான யோகமுஞ் சொன்னேன்
மு[ன்னூரி](ந்நூ)(றி)ல் வாத முதல்வெளி விட்டேன்
மு[ன்னூ](ந்நூ)றில் தீ[ஷ](ட்)சை முக்கியஞ் சொன்னேன்
மு[ன்னூ](ந்நூ)று [ம்பி](மி)ந்தமுப்பதில் முடிவே. (ச)

( . . . . . . . . . . . . . . . . . . . .

என்னவே வானத் திடியினி (லொ)ன்று
சொன்னதோர் பூமிச் சூலினி(லெர்)
கன்னிற மான[க] கடலினி (லொ)ன்று
முன்னது வான மூன்றுமுப் பூவே. (மஅ)

**End:**

அஞ்சதுபோ டடைத்திடு வாய்தனை
பஞ்சதி ஞலே பார்த்திடு[க்] கவசம்
வஞ்ச வுவர்க்குள் வைத்தெடு மண்டலம்
கெஞ்சஞ் சரக்கு(க்) கிறுகிறுப் பாமே. (௯௰)

ஆமேயிச் சவுக்காரத் தீநீருல்
ஓமே யமிர்தார சிங்கியி லூட்டி
யாமேசுண் ணும்பில் வைத்திட் டெரித்திட்(த்)
தாமே திறைந்த சற்குரு வெண்ணே. (௯௧)

( . . . . . . . . . . . . . . . . . . . . . )

கோலமீ தென்னும் குருவிதி ஞலே
காலனு [யி](மி)ல்லை(க்) கலிகளு மில்லை
பாலெனு ம[மு]மிர்த பானமு[மு]ண்டாம்
மூல மிதான முப்பது முற்றே. (௯௯)

(கு-பு.)—

இந்நூல் ரஸவாதஞ்செய்தற்குரிய முப்பூ, சவுக்காரம், செயநீர் முதலிய வற்றைச்செய்யும் வகையைக்கூறுவது. நந்திதேவர் இயற்றியதாகச் சொல்லப்படுகிறது. இந்தபிரதியில் இது முற்றும் உள்ளது.

---

## (g-1) அகத்தியர் புனைசுருட்டு, பதினெட்டு.

## AHATTIYAR PUNAIŚURUṬṬU, PADINEṬṬU.

Foll. 226*a*—231*a*.

Describes the method of causing eight different kinds of harm to one's enemies with the aid of Mantras relating to Kāli, Iruḷan, Karuppan, Madurai Vīran and other minor deities. The magical diagrams relating to these deities are all given herein.

Complete.

**Beginning:**

சிருலவு(ம)ஷ்ட க[ற்](ர்)ம[ம்யெ](மெ)ட்டுவகைத் தொ[ளி](ழி)லுந்
தெரிந்தெடுத்து புனைசுருட்டில் தெளிவுதன்னைக்கூறக்
காருலவு மைங்கரனுஞ் சற்குருவுங் காப்புக்
கமல மல[ற](ர்) பதத்துடையான் சிவனயன்மால் காப்பு
வாருலவும் வனசமல[ற்](ர்) மாது திரு மாதை
வா[ள்](ழ்)த்தி மனம் தே[த்தி](ற்றி)யுளஞ் சாற்றறிவோர் கேளீர்
பேருலவுந் தானதவ மானசிவ யோகி
பெரியவருக் காகு மிதி[ர்]ற் பேசுங் கருத்துத் தானே. (க)

* * * *

செ[யி](ய்)த மந்திரங் காளியே வாவென் றோதுந்
திருநீறு தீப்பாஞ்ச கன்னியு(டை)ட நீறும்
மெய்யருந் தலை யோட்டில் சக்க[ற](ர)ந்தான் வட்ட
மிருத்த சு[ளி](ழி)யோ)ங்காரம் நமெவெ[ளு](ழு)த்து(ச்) சட்டம்
அய்யனார சப்பனுமே யுன்வசமே யாகும்
ஆள்மறைக்கும் பூதமெல்லா மாண்டுமை யாகும்
கைவல்லியஞ் சித்திமாந்த்ரீக வித்தை
காசியி லாடுகின்ற தொ[ளி](ழி)ல் முறை[ர]மயெல் லாமே. (ஙு)

## End:

வைத்தவகத் திருநீறு மா[ற](ர)ண சக்க[ற](ர)த்தைக் கீறி
மந்திரமுஞ் சொல்லியவன் பே[று](ரு)ங்கூட்டி
சு[த்து](ற்று)மடா நிசமிது தான் மா[ற](ர)ணமே யாகுந்
சுருக்கிதுபோ லொன்று மில்லை தொல்லுலகில் தானு
கத்தியெண்ணு முன்னென்று செபித்தா லென்னக்
காசினியி[ல்க்](ற்) கருவோடே செ[யி](ய்)தா லல்லோ பலிக்கு
[ம்யெ](மெ)த்தொ[ளி](ழி)லு மாடுமிந்தப் புனசுருட்டிற் கருத்தா
[ன்யினினூ](னிந்நூ)லை மெய்யானல் ச[ற்றி](த்தி)யமா முற்றே. (கஅ)

சின்னு


சின்னுகிழக்கு மூலை.

[யி](இ)ருளன்.


அக்கினி மூலை.

மேற்கு மூலை.


கறுப்பன்.

மாடன்


கன்னி மூலை.

வடுகன்


ஈசானிய மூலை.

அனுமான


வடமேற்கு மூலை.

சங்கிலி.


வடமேற்கு மூலை.

காளி.


வடக்குத் தெற்கு மூலை

(கு-பு.)—

இந்நூலில் காளி, இருளன், கறுப்பன், மதுரைவீரன், மாடன், வடுகன், அனுமான் முதலிய தெய்வங்களின் அருளால் விரோதிகளுக்குத் துன்பம் உண்டுபண்ணுதற்குறிய வழிகள் சொல்லப்பட்டுள்ளன. இது அகத்தியர் இயற்றியதாகச் சொல்லப்படுகிறது. இந்தப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது.

## (h) மாணிக்கவாசகர்ஞானத்தாழிசை.

MĀṆIKKAVĀCAKARÑĀNATTĀḺIŚAI

Foll. 232a—237b.

Philosophical stanzas addressed by a devotee to his mind and expressing his experiences after realizing God.

Complete.

**Beginning:**

சுழியாகிய முனைகண்டபி [ன்]னு[த்தா](ற்ற) றுறவற்றாய்
ஞூதும்பல பொய்பேசிய தொழிலும்பிறர்க் கிட்டாய்
வழியாகிய துறைகண்டபி னர[அ]னு[ஷ்]ட்டானமு மற்றாய்
வழங்கும்பல நூல்சா[ஸ்]த்திர (ம)னைத்தும் பிறர்க் கிட்டாய்
விழியாகிய மலர்கண்டபி[ன] னுயரர்ச்சனை யற்றாய்
மெய்(ந்)நீறிடுந் தவமந்திரம் விட்டாய்சிவ முற்றாய்
அழியாப்பதி குடியேறி[ே]ய பின் னச்சமு மற்றாய் [மே. (க)
ஆரொப்பவ ரிணையற்றவ னிலெ பெ[த்திடு](ற்ற)(னை யிலைவற்றனை) மன

நெஞ்சிற்பொரு ளடிகண்டபி [ன]ெ[ந](ன)ஞ்சிற் பகையற்றாய்
நேசத்துடை யார்மங்கையர் மேலும் நினைவற்றாய்
மிஞ்சிச்சொலு முரையாண்மையும் வீம்புமிடும் பறாய்
விரதங்களும் வேதங்களும் வீணகவே மறந்தாய்
அஞ்சு(மு)ட லாய்(க்) கண்டபின் னுசைபடடு மறாய்
ஆறுந்திருக் கோவிலெனு மதவுங் கசப புற்றாய்
தஞ்சமெனு [ந](ஞு)ர[த](ன)க்கடல் மூழ்கித் திறமாகித்
தாள்சேர்ந்தனை குறைவே தினி(ச்) சலியாதிரு மனமே. (உ)

**End:**

உருவானது விந்தின்செய [லு](ல)ருவான து [ஞ]நாதம்
உடலுக்குயி [நீ](ரீ)ருமெனி லொருநான்குள முதலுங்
கருவாகிய முனைமீதினி லணுவாகிய வெளியிற்
குடியாகிய பதிகண்டபி னருள்வாத ஆரானில்
ஒருவாசகன் திருவாசகன் பதிமீதினில் மகிழ்ந்தே
உரைபாடிய தமிழ்தாழிசை நெறியின்படி நின்றோர்
கருவாசலி லணுகாமலே பிறவாநெறி பெறுவார்
கடவுள்செய லறியாதவர் கருவாசலில் புகுவார். (கஉ)

முற்றும்.

(த-பு.)—

இது, ஞானவிஷயமானது. பக்தரொருவர், தாம் அநுபவித்தவற்றை இவ் வுலகுய்ய மனத்தை நோக்கிக் கூறுவதாக அமைந்தது. இந்தப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது.

நூல் பூர்த்தியானதன் பின்னர்,

"மனமொன்றி நின்றவிடஞ் சரிதை யாகும்
மன்னியதோர் சுழுத்தியிலே மாயவேண்டாம்
மனமொன்றி நின்றவிடங் கிரியையாகும்
மனனு[ஞ்]சிவ பூசையிலே மயங்கவேண்டாம்
மனமொனறி நின்றவிட மியோகமாகும்
மனனியதோ ருட[லத](ற)னை மாய்க்கவேண்டாம்
மனமொன்றி நின்றவிடம் ஞானமாகும்
மனமொன்றி நிலைபரத்தை மன்னலாமே."

என்னுஞ் செய்யுளொன்றும், தொடர்பில்லாத ஐந்து வடுகளும் உள்ளன.

---

## R. No. 281.

Paper. 13½ × 1½ inches. Foll. 24. Lines, 20 in a page. Tamil and Grantha. Good.

Transcribed in 1913–14 from a MS. of A. M. Śrīnivāsācāriyar of Triplicane.

Bound as foll. 85 to 108 of the MS. described under R. No. 68 *ante*.

### திருமலையொழுகு.

### TIRUMALAIYOLUGU.

This is only a continuation of the further portion of the work described under R. No. 68 *ante*.

Incomplete.

**End:**

-படி திவ்ய நகரத்தை மஹாபலவத்தமமாக(க்) கட்டிக்வைத்தும், ஐயங்கார் செஷ்டிருக்குக்கட்டட பெரிய திருவீதியை நிர்மித்து. ( . . . . . . . . . . . . . . . . ) தமக்கு அந்திமதசை வந்தபடியாலே தமக்கு இளவரசான அப்பன் ஸடகோப ஜீயரையும் தம்முடை ஸிம்ஹாஸனத்திலே நியமித்து, ஜயவர்ஷம் கார்த்திகை மீ த்வதியை தீர்த்தம் ப்ரஸாதித்தருளினர். பின்பு அப்பன் ஸடகோபஜீயரும் தம்முடைய இளவரசாக(க்) கார்த்திகை மீ பூராடாதியில் பராங்குச ஜீயரையும் நியமித்தருளி . . . . . . . வர்ஷந்தாழும் திருநந்தவனம் . . . . . . . . . .

(கு-பு.)—

மூவருடத்திய காட்லாக்கின் 68-ஆம் நம்பர் பிரதியில் இந்நூலின் முற்பாகம் வந்துள்ளது.. இதிலும் இது முற்றுப்பெற்றதாகத் தெரியவில்லை.

## R. No. 282.

Paper. 11 × 9½ inches. Foll. 63. Lines, 20 in a page. Tamil. Good.

Restored in 1915–16 from a MS. of the Library.

### (*a*) தொல்காப்பியம், உரையுடன்.
### TOLKĀPPIYAM WITH COMMENTARY.

Foll. 1*a*—57*b*.

Same work as that described under No. 56 of the D.C.T. MSS., Vol. I.

Incomplete.

(கு-பு.)—

இது டிஸ்க்ரிபடிவ் காட்லாக்கின் 56-ஆம் நம்பா பிரதியைப்பார்த்தெழுதப்பெற்றது. வேற்றுமையில் 22-ஆம் சூத்திர வுரையில், "இக்கருத்துச் சேனாவரையரும் உரையாசிரியர் கருத்தும் இருதிறததனவாக மேலே கூறுமாறு காண்க." எனக்கூறுவதால் அவ்வுரைகாரர் இருவர்க்கும் பிற்பட்டவர் இவ்வுரையாளரென்பது தெற்றென விளங்குகின்றது.

இந்நூலின் பின்பு வெற்றேடு ஒன்று உள்ளது.

---

### (*b*) மிழலைச்சதகம்.
### MILALAICCATAKAM.

Foll. 59*a*—63*b*.

Transcribed in 1915–16 from a paper MSS. sent by M.R.Ry. S. Rādhākṛṣṇa Ayyar Avargal, late Principal, Maharaja's College, Pudukkōttai.

A centum of stanzas giving a description of the greatness of the country known as Miḻalaināḍu (portions of the present Pudukōttai state and Tanjore district) and of the sacred Śaiva shrine at Aluḍaīyār-koil therein as well as the river named Veḷḷār, flowing through it. By Śarkaraippulavar. The king of Tanjore at the time was Pratāpa Singēndiran.

**Beginning:**

பிதிராத கங்கை(க்) குலஞ்சேர் மிழலைப் பெரும்பதிவாழ்
அதிரூபர் யோக ரவர்மேற் சதகமுண் டாக்கு தற்கே
கதிதேரு மின்பக் குருந்தீசர் பாலெந்தக் காலமுமே
முதிராத் செப்பிளங் கொங்கை யோகாம்பிகை முன்னிற்பளே. (க)

மதிவந் துலாவுநல் வாரூர்ப்பெரிய மடந்தை யிறை
நதிவந் துலாவும் டடிநாட்டி வைத்து நிலைதவரூர்
துதிவந் துலாவுஞ் செழுமபூந் தரங்கச் சுவேதமெனும்
நதிவந் துலாவிய நாட்டார் மிழலை நராதிபரே. (உ)

தேளினு மெத்தக் கொடியா ரவரிடஞ் சென்றுமத
வேளினு மிக்கென் றுரையாமல் செந்தமிழ் வேந்தருக்கே
கோளினு(ம்) வெய்ய கலிக்கோடையோடக் கொடுத்த வெகு
நாளினும் பேர்பெற்ற நாட்டார் மிழலை நராதிபரே. (௲)

* * * *

உரைகட்டுங் காவியநூ லாகமங்க ளுயிர்கட் கெல்லா
மிரைகட்டும் பாரக மெல்லாந் தலைகட்டு மிம்மட்டுமோ
நிரைகட்டுஞ் சாலி மிழலையங் காவலர் நீள்வயற்குக்
கரைகட்டும் போது பதினு லுலகமுங் கரங் கட்டுமே. (கக)

அரமொன்று(ம்) பே[ம](வ)ல்விழி யோகாம்பிகை தன் னருள் சிறந்தோர்
வரமொன்று கீர்த்தி மிழலைநன் னாடர் வளமென் சொல்வேன்
திரமொன் றுலகத்தைக் காக்கின்ற வேந்தர்க்குத் திண்புவிமேல்
உரமென்று சொல்வ தெல்லா மவர்செய்யு முரமதுவே. (கஉ)

**End :**

*கேளும் புகழிரும் பாபுரி மேலெல்லை கீழெல்லைநீர்
நீளுங் கடலந்தப் பாம்பாறு தெற்கெல்லை நேர்வடபா
லாளும் புலியெல்லை தானம்புலி நதியாய் விளங்கும்
வேளும் புகழெழிற் காராளர் வாழு மிழலையிலே. (௲௯)

* * * *

†ஆதி வருஷத்தி னுக்குப்பத் தொன்பதென் ருரியர்க
ளோது மந்நாளில் முதன் மண்டகப்படி யுண்டு
வேதிய ராளுடை யாரைப் பணிசெல்வ வேங்கப்பனுங்
காத‡னெல்வேலி மிழலையில் வாழ் கருணாகரனே. (௯0)

* * * *

வில்லவர் சோழர் தமிழ்நாடர் யாரும் விரும்புமிசை
வல்லவர் தெய்வ மறை நூல்கள் சொன்ன வரம்புடையார்
எல்ல(வ) ரென்னப் புலியேழி னுக்கு மெவர்க்கு மெத்த
நல்லவ ராமிவர் கண்டீர் மிழலை நராதிபரே. (௯௲)

பூமேவு[ம்] பொன்னும் புகழ்மேவு மின்னும் பொருமலறக்
காமேவு செங்கை யுடையா ருலகிற்குக் கண்ணனையார்
தேமேவு கீர்த்தி யரிச்சந்த்ரன் போலிந்தத் திண்புவியில்
தாமேவு மின்சொ லுடையார் மிழலை நராதிபரே. (௯௯)

சிறப்புப்பாயிரம் :

தருதஞ்சை வாழும் ப்ரதாபசிங் கேந்த்ர தருமன் மெச்ச
வருமணிமா முத்திரை வேங்கடாசல மால்சம்ப்ரதி
நரதுங்க மானுக்க வாசக வேள்சுனப? நாளையிலே
உரைசெய் மிழலைச் சதகத்தைச் சர்க்கரை யோதினனே.

---

* இது வேளாளர் ஆளுகைககு உட்பட்டதைமட்டும் குறிக்கிறது.

† ஆதி வருஷம் - பிரபவ.

‡ இதிற்குறிப்பிட்ட நெல்வேலிப் பிள்ளை(யின் பரம்பரையினரே) திருப்பெருந்துறையில் இப்போது முதல் திருவிழாமண்ட(க)ப்படி நடத்துகின்றன(ர்).

(கு-பு.)—

இந்நூல், அறந்தாங்கிக்குச் சமீபமாயுள்ள மிழலை நாட்டின் பெருமை முதலியவற்றையும், ஆளுடையார் கோயில், வெள்ளாறு ஆகிய இவற்றின் பெருமைகளையும் விளங்கக்கூறுவது. இதை இயற்றியவர் சர்க்கரைப்புலவரென்றும், இவர் காலத்துத் தஞ்சையை அரசு செலுத்தியவர் 'பிரதாபசிங்கேந்தர' னென்றும் இறுதிச்செய்யுளால் தெரிகிறது.

---

R. No. **283**.

Paper. 11 × 9½ inches. Foll. 116. Lines, 20 in a page. Tamil. Good.

Restored in 1915-16 from a MS. of the Library.

அரும்பொருள்விளக்கநிகண்டு.

ARUMPORUḶVIḶAKKANIKAṆṬU.

Same work as that described under No. 8 (*a*) of No. 1 of M. Śēshagiri Śāstri's Report on a Search for Sanskrit and Tamil MSS

Complete.

(கு-பு.)—

இது சேஷகிரி சாஸ்திரியார் ரிபோர்ட் முதல்வாலயம் 8(a) நம்பர் பிரதியைப் பார்த்து எழுதப்பெற்றது. இந்தப பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது.

---

R. No. **284**.

Paper. 11 × 9½ inches. Foll. 23. Lines, 20 in a page. Tamil. Good.

Restored in 1915-16 from a MS. of the Library.

தில்லைக்கலம்பகம்.

TILLAIKKALAMBAKAM.

Same work as that described under No. 297 of the D.C.T. MSS. Vol. I.

Complete.

(கு-பு.)—

இது டி.ஸ்க்ரிப்டிவ் காட்லாக்கின் 297-ஆம் நம்பர் பிரதியைப் பார்த்தெழுதப்பெற்றது. இந்தப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது.

---

R. No. **285**.

Paper. 11 × 9½ inches. Foll. 15. Lines, 20 in a page. Tamil. Good.

Restored in 1915-16 from a MS. of the Library.

பேரைவேலாயுதர்மாலை.

PĒRAIVĒLĀYUDARMĀLAI.

Same work as that described under No. 349 of the D.C.T. MSS. Vol. I.

Incomplete.

(து-பு.)—

இது டிஸ்க்ரிப்டிவ் காட்லாக்கின 349 - ஆம் நம்பர் பிரதியைப் பார்த்தெழுதப்பெற்றது. இந்தப்பிரதியில் இந்நூல் முற்றுப்பெறவில்லை.

---

## R. No. 286.

Paper. 11 × 9¼ inches. Fol. 162. Lines, 20 in a page Tamil and Grantha. Good.

Transcribed in 1915–16 from a MS. of S. Gōpālācāriyar of Villiyambākkam in the Chingleput district.

### லோகாணி.

### LŌKĀṆĪ.

A work on Jainism. It gives a description of the different worlds and mountains recognised in the Jaina religion, and of the lives of the various Tīrtaṅkarars and other teachers of the Jainas, besides a lot of useful information relating to that religion. A detailed heading of the subjects dealt with in the work are given at the end of this extract in Tamil.

Complete.

**Beginning:**

இருபத்துநாலு தீர்த்தங்கர ஸ்வாமி(து)ணை லோகாணி.

உலக மூன்று மொருங் குணர் தேவதை
தலகி லாத வனந்த குணக் கடல்
விலகி வெவ் வினை வீடு விளைப் பதற்
கிலகு மாமலர்ச் சேவடி யேத்து வாம்.

புரந் தரரும் பூமிமேல் மாந்தர் களு மாங்கே
நிரந் தரம் வந் திறைஞ்ச நேரின்—வரந்தருநல்
வாம னடிவணங்கி மன்னு முலகியல்பை
நாம வகையுரைப்ப னன்கு.

லோகம் த்விவிதம் :—நிச்சய லோகம், வியவஹாரலோகம் என. தத்ர, நிச்சய லோகமென்பது பஞ்சாஸ்திகாய[ம்]மாகிய மஹாலோகஸ்கந்தமாகும்.

வியவஹார லோகமென்பது அனந்தாகாச [அனந்தாகாச] அனந்த ப்ரதேசத்ததாகிய ஆகாச திரவ்ய மத்ய ப்ரதேசத்து அக்ருத்ரிமமாகி, அநாதி ஸம்ஸித்தமாகி வுநோதஉயி, வுநவாத, தநுவாதமென்னும் வாதத்திரயங்களால் பரிவேஷ்டிதமாகி வேத்ராஸந ஜல்லரீம்ருதங்க ஸம்ஸ்தான ரூபமான ஆதிமத்யாவஸானங்களை யுடைத்தாகி நாளிகா தத்பாஹ்ய பேதத்ததாகி தக்ஷிணோத்தரவியாஸம் ஆதிமத்யாவஸாநம் ஸப்த ரஜ்ஜு பிரமாணத்ததாகி, பூர்வ(ா)பரவியாஸம் அதியில் ஸப்த ரஜ்ஜு பிரமாணமாகி, கிரமத்தாற் சுருங்கிவந்து மஹா மேருமூலத்து நாளிகாவியாஸமாகிய ஏகரஜ்ஜு பிரமாணத்ததாகி, புனரபி கிரமத்தால் விரிந்துசென்று பிரஹ்ம கல்பத்து பஞ்சரஜ்ஜு பிரமாணத்ததாகி, புனரபி கிரமத்தாற் சுருங்கிச்சென்று ஸித்திக்ஷேத்திரத்தில் ஏகரஜ்ஜு பிரமாணத்ததாகி, சதுர்த்தச ரஜ்ஜு பிரமாண முயரத்தையு

டைத்தாய் அதோமத்யமோர்த்வ லோகமென்னும் பேதமுடைத்தாகியது. [வியவஹார லோகமென்பதாகும்.] ( . . . . . . ) இதன்மேல் ஐந்து நரகமும் ஐந்துகயிற்றளவாகும். இதன்மேல் த்வதீய நரகமும் ப்ரதம நரகமும் பவண லோகமும் ஒரு கயிற்றளவாகும். இதன்மேல் மஹாமேரு மூலமே தொடங்கி ஸௌதர்ம ஈசான கல்பமிறுதி கஉ-யும், ஸநத்குமார மாஹேந்திரம் கஉ-யும் பிரஹ்மபிரஹ்மோத்தரம் உ-யும் லாந்தவ காபிஷ்டம் உ-யும் ஶுக்ரமஹா சுக்ரம் உ-யும், சதார ஸஹஸ்ராரம் உ-யும் ஆனத ப்ராணதம் உ-யும் ஆரணச்சுதம் உ-யும் இதன்மேல் அஹமிந்தரலோகமாகிய நவகிரைவேயகமும் நவாநுதிசையும். பஞ்சாநுத்தரமும் மோக்ஷமுமாகிய ஸித்திக்ஷேத்திர பர்யந்தமொனறு மான ரஜ்ஜுக்கள் பதினன்காகும்.

நிஶேஷமும் :—நரகலோகமும். பவணலோகமும் அதோலோகமுமென்பதாகும்.

மஹாமேரு மூலந்தொடங்கி மநுஷ்யலோகமும், வியந்தரலோகமும், ஜ்யோதிர்லோகமும், மஹாமேரு சூளிகாறுமான ரிதுவிமான பர்யந்தம் மத்யலோகமாகும்.

கல்பமும், அஹமிந்திரலோகமும் ஸித்திக்ஷேத்திரமும் ஊர்த்துவலோகமென்பதாகும். அவற்றுள அதோ லோகஸ்வரூபஞ் சொல்லுதும் :—

நரகம் ஏழுவகைப்படும். ரத்நபிரபை, சர்க்கராபிரபை, வாலுகாபிரபை, பங்கபிரபை, தூமபிரபை, தமப்பிரபை, தமஸ்தமஃபிரபை எனவும், கர்மை, வம்சை, மேகை, அஜ்ஜனை, அரிஷ்டை, மகவி, மாகவி எனவுமான குறி(ப்)பெயருங் குணப்பெயருமாகும். இவை, பிரதமநரகமுதலாக வறிக. ( . . . . . . ) மற்றும் நரகத்தினின்றும் வந்தவர்க்கு சக்கரவர்த்தித்துவமும், பலதேவத்துவமும் வாஸுதேவத்துவமுமாகாது. தத்பதவிகளுக்குச் சாரித்ரமே முக்கியமாகையினால் தரிக்கிற தூத்தரமாகிய காயக்கிலேசங்களினால் வைமானிக தேவராகிப் பிறந்து தத்பதவியினை எய்துவர். இவ்வண்ணம் நரககதிஸ்வரூபம் ஸம்க்ஷேபத்தினாற் சொல்லப்பட்டது.

நரகலோகம் முற்றும்.

இனி, பவணலோகஞ் சொல்லுதும்.

**End:**

இவ்வண்ணம் ஜனனமரணங்களுக்கு அந்தரஞ் சொல்லப்பட்டது.

தேவகதியிற் பிறக்கிற பேர்களுடைய விசேஷஸ்வரூபஞ் சொல்லுதும் :—

மநுஷ்யலோகத்திலே விலக்ஷணகாந்தேப்பியபரிணமத்திலே கூடினவர்கள் ஸ்(வ)யோக்கிய சுபகர்மவசத்தினால் ஈசானகல்ப பர்யந்தம் கார்யதேவர்களாக(ப்) பிறப்பர். . . . . . . . . . அப்படியாகிய ஸித்தத்வத்தினை மத்யமலோகத்து அமலஸஹஜாத் மாஷானத்தினால் கர்மமல களங்கத்தை நிர்ம்மூலம்பண்ணின சுத்தாத்மர் பிறக்கும் ; அந்த ஸ்தானஸித்தியும் ஸ்வாத்மோபலப்தியும் பரமஸ்தானம் பவித்ரம் கல்யாணம் ஸுகதிலோக உத்தர பரமபதம் அக்ஷயம் அனந்தம் சாசுவதம் அஜராமரம் அபவ்யர்க்கு அகம்மியம் பவ்வியர்க்கு(க்) கம்யம் ஸம்யக்ஞானிகளால் சொல்லப்படுவதும் அதுவே, மோக்ஷமென்பதுமாகும். இப்படிப்பட்ட மோக்ஷத்தில் ஸித்தபரமேஷ்டிகள் ஸுகத்துக்கு திருஷ்டாந்தரஞ் சொல்லுதும்.

சக்கரவர்த்திகள் ஸுகத்துக்கு அனந்தரம் போகபூமி மநுஷ்யர் ஸுகம்; அவர்கள் ஸுகத்துக்கு அனந்தரம் நகேந்திரர் ஸுகம்; அதனுக்கு அனந்தரம் தேவேந்திரர் ஸுகம்; அதனுக்கு அனந்தரம அஹமிந்திரர் ஸுகம் இப்படிப்பட்டபேர் முதலாகி ஸம்ஸார ஜீவன்கள் திரிகாலத்திலும் அநுபவிக்கிற ஸுகம் . . . . அனந்தமாகும்.

நம: ஸித்தேப்ய:.

லோகஸ்வரூபம் ஸூத்ரம்.

ஸாகாரஞ்ச நிராகாரம் ஸாக்ஷாத்ஸித்திகஸம்ஸ்தவம் |
விஷேஷ ப்ரணமாம்யேகம் ஜ்ஞானலோகஸ்வரூபமயம் ||

லோகஸ்வரூபம் ஸூத்ரம்.

லோகாணியில்.

(1) ஹவணலோகம்.
(2) மத்யமலோகம்.
(3) மந்தரஸ்வரூபம்.
(4) மந்தரத்தில் வனஸ்வரூபம்.
(5) பத்ரஸாலவன வேதிகை.
(6) மேருவர்ணனம்.
(7) பாண்டுக வனம்.
(8) ஜம்பூ விருக்ஷம், சால்மலி விருக்ஷம்.
(9) யமகிரிபர்வதம்.
(10) மேருவுக்கு நாலுபக்கத்து(ப்) பொய்கை, காஞ்சனஸ்வரூபம்.
(11) கஜதந்த பர்வதம்.
(12) விதேஹம்.
(13) தேவாரண்யம், பூதாரண்யம்.
(14) விதேஹக்ஷேத்திரத்தில் தேவிவிஸ்தாரம்.
(15) சக்கரவர்த்தி ஸம்பத்து.
(16) ஷட்கண்டம்.
(17) விதேஹ விஜயார்த்தம்.
(18) வ்ருஷபகிரி.
(19) நாபிகிரி விஜயார்த்தம்.
(20) ஹிமவதாதிகூடங்கள்.
(21) போகபூமி மநுஷ்யர்க்கு நால் வகை.
(22) அநீதகர்மபூமிகள் ஸ்வரூபம்.
(23) கல்பக விருக்ஷம்.
(24) தீர்த்தங்கரர் சரீரோத்ஸேதாதி வர்ணனைகள்.
(25) தீர்த்தங்கரர் குலங்கள்.
(26) சக்கரவர்த்தி பேர் முதலாகிய வர்ணனை.
(27) நாரக ருத்ரர்.
(28) கல்கி.
(29) பஞ்சம காலாந்தம்.
(30) ஷட்ம காலாந்தம்.
(31) ஹுண்டாவஸர்ப்பிணி ஸ்வரூபம்.
(32) உத்ஸர்ப்பிணி.
(33) லவண ஸமுத்ர ஸ்வரூபம்.
(34) ஜம்பூத்வீப சந்திர ஸூர்யர்.
(35) லவண ஸமுத்ர சந்திர ஸூர்யர்.
(36) குமாநுஷ்ய த்வீபம்.
(37) தாதகீஷண்ட புஷ்கரார்த்தம்.
(38) மாநுஷோத்தரபர்வத ஸ்வரூபம்.
(39) நந்தீசுவர த்வீப ஸ்வரூபம்.
(40) குண்டல ருசகர பர்வதம்.
(41) வியந்த்ரலோக ஸ்வரூபம்.
(42) ஜ்யோதிஷ்க லோகம்.
(43) கல்பலோகம்.
(44) கல்பவிமானங்கள்.
(45) கல்பஸ்திரீகள் உற்பத்தியிடம்.
(46) கல்பதேவர்கள் அவதிஜ்ஞான விகுர்வாண சக்தி.
(47) தேவர்கள் ஜனனமரணம்.
(48) ஸௌதர்ம கல்பமுதலாகிய தேவர்கள் லௌகாந்திகர்களாயுஷ்யம்.
(49) கல்பதேவிகளாயுஷ்யம்.
(50) ஜீவர்கள் தேவகதியிற் பிறக்கிறபேதம்.
(51) ஸித்திக்ஷேத்திர ஸ்வரூபம்

லோகாணி அட்டவணை முற்றும்.

(கு-பு.)—

இந்நூல், ஜைனமதசம்பந்தமானது. அம்மதப் பெரியோர்களாகிய தீர்த்தங்கரர்களின் பெயர்கள், சக்கரவர்த்திகளின் பெயர்கள், அவர்கள் குலங்கள், சரீர அளவு முதலியனவும், கல்பங்களின் பேதம், சமுத்திரங்களின் பேதம், பர்வதங்களின் பேதம், வனங்களின் பேதம், தேவர்களின் பேதம் ஆகிய இவைகளும் இவை போல்வன பிறவும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இந்நூலை இயற்றியவர் பெயர் முதலியன விளங்கவில்லை. இந்தப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது.

---

## R. No. 287.

Paper. 11 × 9½ inches. Foll 80. Lines, 20 in a page. Tamil. Good.

Restored in 1915–16 from a MS. of the Library

### அகராதிச் சுருக்கம்.

### AKARĀDIC CURUKKAM.

Same work as that described under No. 3 of the D.C.T. MSS., Vol. I.

Incomplete.

(கு-பு.)—

இது டிஸ்க்ரிப்டிவ் காட்லாக்கின் 3 - ஆம் நம்பர் பிரதியைப்பார்த்தெழுதப் பெற்றது. இந்தப்பிரதியில் இந்நூல் முற்றுப் பெறவில்லை.

---

## R. No. 288.

Paper. 11 × 9½ inches. Foll. 50. Lines, 20 in a page. Tamil. Good.

Restored in 1915–16 from a MS. of the Library.

### சங்கரமூர்த்தி விறலிவிடுதூது.

### ŚAṄKARAMŪRTTI VIṞALIVIḌUTŪDU.

Same work as that described under No. 316 of the D.C.T. MSS., Vol. I.

Incomplete.

(கு-பு.)—

இந்நூல் டிஸ்க்ரிப்டிவ் காட்லாக்கின் 316-ம் நம்பர் பிரதியைப் பார்த்தெழுதப்பெற்றது. இந்தப்பிரதியில் இது முற்றுப்பெறவில்லை.

---

## R. No. 289.

Paper. 9½ × 11 inches. Foll. 83. Lines, 20 in a page. Tamil. Good.

Restored in 1915–16 from a MS. of the Library.

### இலக்கணக்கொத்து, உரையுடன்.

### ILAKKAṆAKKOTTU WITH COMMENTARY.

Same work as that described under R. No. 209(*a*) *ante*.

Complete.

(கு-பு.)—

இந்நூல் மூவருடைத்திய காட்லாகில் 209 (*a*) நம்பர் பிரதியைப்பார்த்து எழுதப்பெற்றது. இந்தப்பிரதியில் இது முற்றும் உள்ளது.

---

## R. No. 290.

Paper. 11 × 9½ inches. Foll. 16. Lines, 20 in a page. Tamil. Good.

Restored in 1915-16 from the MS. described under No. 346 of the D.C.T. MSS., Vol I.

### திருக்கழுக்குன்றமாலை.

### TIRUKKALUKKUNRAMĀLAI.

Same work as that described under No. 346 of the D.C.T MSS., Vol. I.

Complete.

(கு-பு)—

இது டிஸக்ரிப்டிவ் காடலாகில் 346-ஆம் நம்பர் பிரதியைப்பார்த்து எழுதப்பெற்றது. இந்தப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது.

---

## R. No. 291.

Paper. 11 × 9½ inches. Foll 44. Lines, 20 in a page. Tamil. Good.

Restored in 1915-16 from the MS described under No 323 of the D.C T. MSS, Vol I

### இராகவர் பிள்ளைத் தமிழ்.

### IRĀGHAVAR PILLAIT TAMIL.

Same work as that described under No 323 of the D.C T. MSS, Vol. I.

Wants the last stanza, otherwise complete.

(கு-பு)—

இந்நூல் டிஸ்கிரிப்டிவ் காட்லாகில் 323-ஆம் நம்பர் பிரதியைப்பார்த்து எழுதப்பெற்றது. இப்பிரதியின் இறுதியில் ஒரு பாடல் இல்லை.

---

## R. No. 292.

Paper. 11 × 9½ inches. Foll. 48 Lines, 20 in a page. Tamil. Good.

Restored in 1915-16 from a MS. of the Library.

### (*a*) பிராசாத தீபம்.

### PIRĀSĀDA DĪPAM,

Foll. 1*a*—11*a*

A treatise on Śaiva Vēdānta explaining the various Tattvas or principles in accordance with what is found stated in the Śaivāgamas and laying down the means of obtaining salvation.

**Seems complete in 39 stanzas.**

**Beginning:**

வையமிசைமன் னுயிர்கள்முத்திபெற
. . . நல்வகுத்தநூலி . . . .
. . . (பிரா) சாதமுரைத் தற்கிறைவனி மவரையி
. . . . னீன்ற
செய்யநிறத் தொரு(கோ)ட்டு மும்மதத்து
நால்வா யைங்கரஞ்செ . . . . .
கைவரையி னிருபதமென் கண்ணிணைசேர்த்
திதையமதில் கருதல் செய்வாம். (௧)

விஞ்சதியுஞ் சோடசமுந் துவாதசமுந்
தெசமு நவமேவு மெண்ணு
றைங்கலையி னுமத்தா லெண் வகையா
யாகமங்க ளறைந்த வாற்றால்
வெங்குருமா [ன](ந)கர்வள்ளல் பதம்பரவி
யெண்ணிரண்டு கலையின் மேன்மை(த்)
துங்கமுறப் பி[ரு](ரா)சாத தீபமெனத்
தமிழதனுற் சொல்ல லுற்றும். (௨)

வெண்கமல நாவிதழா மூலாதா ரத்தில்
மிகநாப்பண் ணூன்றி விருத் தாகாரச் ச[ற்]((ர்ப்)ப
மங்கதுபோ லெழுந்திருக்குங் குண்டலியி னடுவே
யரவிந்த நூல்போலங் கெழுபதினு யிரமா
மெண்படுநா டிகளுக்கு மூலமதாம் பிரமமெனு நாடி
மத்தியத்தி னசபைமனு வகாரத்
தொண்பயிலு நிறமின்னி னொளியாகி யெழுந்தங்
குயர்நாபி யடியளவா யுறும்விரற்பன் னிரண்டே. (௩)

**End:**

மிகுமேதை முதன்மூன்று கலைமுடிவி லொன்றும்
விந்துமுதல் மூன்றுகலை முடிவில்விளை வொன்றும்
தகுநாத முதல்மூன்று கலைமுடிவி லொனறுஞ்
சந்தவியா பினிக்கு மொன்று சமனையதற் கொன்றுந்
தொகுஞான வனமனைக்கு மொன்றுகப்பேதச்
சூனியமா றுகுமிதன் மேற்பா . . மாம் விசுவம்
புகுபிராணன் மனுநாடி பிரசாதஞ் சத்தி
புகல்கால தததுவமென் றேழாகப் புகலும். (௧௦)

யுருவா . . விந்துவிடையிய[த்தி](ற்றித்)தானு
மலையா . . . தாதியீசர்க்குள்ளவறிவு
தொழில்முழு தினையு மளித்துப் பின்னைக்
கலையாதி மாயையினைக் கலக்கி யாக்கிக்
கரியமல மாயையினைக் கழித்துநாளுந்
தலையான [யா](வா)னந்த முயிர்கட் கியுஞ்
சாம்பவிதாட் கம்லமலர் தலைமேல் வைப்பாம். (௧௧)

(கு-பு.)—

இந்நூல் சைவசித்தாந்த விஷயமானது. ஆறாதாரங்கள், பிரமாந்திரம், நாடிகள், தத்துவங்கள் முதலிய இவற்றின இலக்கணங்களை விளக்கி முத்தியடையும் வழியைக்கூறுவது. காப்புச்செய்யுளும் பாயிரமும் நீங்கலாக முப்பத்தொன்பது பாடல்களாலாகியது. நூலாசிரியர் பெயர் முதலியன இன்னவெனப் புலப்படவில்லை. இந்தப்பிரதியில் இது முடிந்துளதென்று தோற்றுகிறது.

---

## (*b*) தசகாரியம்.
## DAŚAKĀRIYAM.

Foll. 11*a*—39*b*.

A treatise explaining ten points in connection with the Śaiva Siddhānta, of which three relate to Tattvas, three again to soul and its realization, and the remaining four relate to Śiva and His realization.

Complete but full of lacunae.

**Beginning:**

உழிதர லீய்ந்தகாய வோங்கலால் காமமாதி
கழிவருங் கதி . . . ன்றுளம் வருந்துவேனை
வழிமது வொழுகுந் தண்டாமரையமடி நீழல் சேர்க்கும் [வாம்.
பொழிமதக் கலுதழி [ற](நா)ல்வாய்ப் பொருப்பினை விருப்பஞ் செய்

* * * *

என்றினிய . . . மியம்பவது கேளா
தின்ற புதல் வன்றொழுது நீடருளி னாலே
யன்று தெச காரிய மளித்த முறையாலெற்
கின்றருள் செய் யெனறிடலு மேந்தலருள் செய்வான். (க)

தத்துவரூபங் காட்சி த[ற](த்வ)சுத்தி யா[ற](ன்)மரூபஞ்
சித்துயிர்க் காட்சி சுத்தி சிவரூபந் தெரிசனத்தோ
டொத்துறை யோகம்போக மொன்றதோ டொன்று மன்றோ
பத்தெனுங் காரியத்தி னுத்தேசம் பகருங் காலே. (உ)

வேறு.

ஆகி லிப்படி யையிரு காரியம்
வாகை சூடியதாபதமனனவ
ஓகையோ டெற்குணர்த் துதியென்றலு
மேகன் ஞான வியல்பை யியம்புவான். (௩)

சிவசமவேததயாகிச் சித்தாகி யமலையாகு
முவமையில் சத்தியொன்றே ஞானமா முரைக்கில் முன்னாட்
பவமுறு காலந்தன்னிற் பருவஞ்சே ருயிர்கட் கீசன்
அவமுற வுரைத்த [ற](நா)லே ழாகமத் தமர்வ தர்கும். (ச)

சுத்தமாம் விந்துமாயை யிடத்தெழுந் தூலசூக்கத்
தத்துவ மனைத்து நான்காந் தனுகரணாதி (யெல்லாம்)
உத்தம குணத்தோ யன்றோ டொன்றியே நின்றவென்றும்
புத்தி மூன்றதாகப் புகன்றிடி னுருவ மீதாம். (ரு)

**End:**

திங்(க)ளைத்திளைத் தவர்விழிகளானும்
பாங்குறு மொழிக(ளா)னுஞ்செய்ய
வோங்கிய கரங்களானு[ம்]முலகெலாஞ்சிவ
. . . பெருமையெம்மா ளக்கலாந் தகைமை . . . (௯)
. . . மீசன் பொருந்துமாலயங்களெல்லா
முறையுணர்(வி)ந்துமேலாமொருவனை தருவமென்றெத்
தரையினிற் றொழுதுபோற்றித் தற்பர வடிவாய் வாழ்வர்
கரையிறந் தகன்ற ஞானக் கடலமு தருந்தி னூரே. (௱)
சிவபோக முற்றும்.

(கு-பு.)—

இந்நூல் சைவசித்தாந்தத்தைச்சேர்ந்தது. தத்துவரூபம், தத்துவக் காட்சி, தத்துவசுத்தி, ஆத்ப ஸ்வரூடம், ஆத்மகாட்சி, ஆத்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவ போகம் என்னும் இப்பத்து விஷயங்களையும் விளக்கமாகககூறுவது. இந்தப்பிரதியில் இது மூற்றும் உள்ளது. மூலப் பிரதியின் ஏடுகள முறிந்துள்ளமையால் இடையிடையே பல செய்யுட்கள் குறைந்திருக்கின்றன. இதை இயற்றியவர் பெயர் முதலியன தெரியவில்லை.

இந்நூல் பூர்த்தியானவுடன் வெற்றேடு ஒன்றுள்ளது.

---

(c) கலைஞானதீபம்.

KALAIÑĀNADĪPAM.

Foll. 41*a* 48*a*.

Transcribed in 1915-6 from a MS. of T. M. Śrīnivāsavaradatātācāriyar of Villiyambākkam, a village in the Chingleput district.

Same work as that described under R. No. 277(*h*) *ante*.

Complete.

(கு-பு.) –

இந்நூல் மூவருடத்திய காட்லாக்கின் 277 (*h*) நம்பா பிரதியைப்பார்த்து எழுதப்பெறறது. இந்தப்பிரதியில் இது முற்றும் உள்ளது.

---

R. No. **293**.

Paper. 9½ × 11 inches. Foll. 122. Lines, 20 in a page. Tamil. Good.

Restored in 1915-16 from a MS. of the Library.

(*a*) சிவானந்தமாலை, உரையுடன்.

ŚIVĀNANDAMĀLAI WITH COMMENTARY.

Foll. 1*a*—14*a*.

A treatise refuting various systems of philosophy and explaining the word, Advaitam, as understood by the followers of the Śaiva religion. The author, whose name is not stated, supports his opinion by means of quotations from Kuṟundiraṭṭu, Tēvāram, Tiruvācakam, Ñānaśatakam, Cidākāśavilāsam and other works.

**Complete.**

**Beginning:**

ஆக்கையெனும் புழுக்குரம்பை யணைந்தணையாப்பொருளை
யருளொளி(ளை)ய பராபரைக்கு மப்புறமா ம(றிவை)
நீக்கமறமயிர் . ணை . . மி . மறவெவ்வுலகு
நிறைந்துநின்ற முழுமுதலை நினைவிலெழுஞ்சுடரை
டாக்கியங்கள்பழுத் . . . . . ததவக்குறைகள் முடித்த
பழவடியார்க் கருளுதவும் பசுந்தண[ற்](ர்க்) கற் பகத்தைத்
தாக்குமன விகற்பத்தி னளவுபடா வொன்றை
மாசற்ற வெறுவொளியை மனவெளியி லடைப்பாம்.
யானுந் தானுந் தனிபோயாகே தான் றனேநான்
யானுந் தனிமுத லன்றென்னெழியத்
தானுந் தனிமுத லன்றிங் கிதிவன் தன்னுணே
தப்பா தினியிதற்குன் றூல் கதற்றேன் யான்.

எ-து யானுந் தானுர் தனிபோய் எ-து முத்திக்கண் ணுமான்மாவுஞ் சிவமு மிரண்டாயிருக்குமென்று கூறிய சமவாதியை நோக்கி, யானென்னு மான்மாவுந் தானென்னுஞ் சிவமு மிரண்டாயிருக்குமென்று கூறிய சமவா தியை நோக்கி, யானென்னுமான்மாவுந் தானென்னுஞ்சிவமு முத்திக்கண் இரண்டாயிருக்குமென்று நீ கூறிய வா[ற்](ர்த்)தை சைவசித்தாந்தமன்று; 'ஈது பொய்' என்றிவர்கூற அதற்கு, அவன் அஃது எங்ஙனமென்று கே[ழ்](ட்)ப,

யானேதான் றனேநான் எ-து யானாகிய ஆன்மாவே தானாகிய சிவம்; தானாகிய சிவமே யானாகிய வான்மா என்று இவர்கூற, அதற்கு அவன், நன்றுகூறினீரன்றே! நீர் சைவசித்தாந்தியென்று உம்மோடுங் கடாவினன்; நீர், இவைகூறியதனால் உம்மை மாயாவாதியென்று உட்கொண்டேன் என்று அவன்கூற, அதற்கு அனேகதீப மோரிடத்திருந்தவிடத்து அத்தீடப் பிரகாச மோகமேகமாயிருப்பினும் அத்தீபங்கள் பிரதக்காகா(கு) வேறுவேறாயிருப்பது போலச் சிவனது சாட்குண்ணியத்தோடு முத்திபெற்ற ஆன்மாக்களுடைய சாட்குண்ணிய மோகமு மேகமாயிருப்பினும் அச்சிவனு மான்மாக்களும் பிரத்தகாக வேறுவேறாயிருக்குமென்றகூறும் உன்கருத்துப்போலும் அன்று; சூரியன்றனே கடசலத்திற பி[றி](ர)திபலிச்சிருந்து, கடசலத்தைச் சுவறப்பண்ணி பிரதிபிம்பத்தைத் தன்னோடும் அயிக்கியமாக்கிக்கொள்ளுவதுபோல, பிரமந்தானே . . . . கந்தோறும் பி[றி](ர)திபலிச்சிருந்து முத்திக்கண் அந்தக்கரணலயம்பண்ணிச சீவாத்மாவைத் தன்னோடும் அயிக்கியம் பண்ணிக்கொள்ளுமெனறு சொல்லும் மாயாவாதி கருத்துப்போலுமன்று நமது கருத்து; என்று இவர்கூற; ஆயின் நமது கருத்துத்தான் எங்ஙனமென்று கே[ழ்ப்](ட்)ப,

யானுந் தனிமுதலன்று; என்னெழியத் தானுந் தனிமுதலன்று எ-து யானாகிய ஆத்மாவுஞ் சிவத்தைவிட வேறொரு பொருளாயிருப்பதன்று; ஆன்மாவாகிய என்னைவிடச் சிவமாகிய தானும் வேறொருபொருளாயிருப்பதன்று என்று இவர்கூற, அதற்கு அவன் என்னைப்போலிரண்டாயுங்கூறுகின்றீர்! மாயாவாதியைப்போலொன்றாயுங்கூறுகின்றீர்; ஆகலின் என்னோடுங் கூடாதவனோடுங் கூடாது கூறினீர்; உமது சித்தாந்தத்துக்கு ஓர் திட்டாந்தர(ந்)தானுண்டோவென்று கே[ழ்ப்](ட்)ப, அதற்குத் தீபமு நெய்யு மிரண்டாயிரு

க்கவும் இது தீபமென்றும் இது நெய்யென்றும் பிறித்து அறியக்கூடாது; அது வே இதுவாய் இதுவே யதுவாயிருப்பதுபோலச் சிவமென்றும் ஆன்மாவெ ன்று மிரண்டாய்ச் சொல்லப்படுவதாயினும் முத்திக்கண் சிவமென்று மான் மாவென்றும் பிறித்தறியக்கூடாது; அதுவே யிதுவா யிதுவே யதுவா யிருத் தலி னுன்கருத்தையும் அவன் கருத்தையும் வைத்துக்கொண்டு நமது அத் துவிதங்கூறினேமென்றுகூற,

**End:**

குறுந்திரட்டு.

அண்டமேவிட வனைத்து மனைத்தையு மண்டமேவிக்
கொண்டல்போ லெவையு ஞானக் குறைவிலா நிறைவினாலே
கண்டதோர் பொருளை யந்தக் கருத்தினாற் காணிற் றனே
அண்டநா டகனார் மேனி யானதே யைய மின்றே. என்றும்,

ஒழிவிலொடுக்கம்.

அண்ட மெண்டிக் கெங்க[ண்]ணு மடங்க சூனிய மதாகக்
கண்டுகொண் டிருக்கக் கண்ட கருத்தையு மறவே விட்டால்
அண்ட மெண்டிக் கெங்க[ண்]ணு மாய்நின்ற வானந்தத்தைக்
கண்டுகொண் டிருக்கும் வண்ண மகத்தில்வந் துதிக்கு மன்றே. என்றும்.

* * * *

முன் யானெனதாய் நின்ற பி[ற](ர)பஞ்சமான இது, இப்போது யானென தென்றாகவு மிப்பி[றவ](ரப)ஞ்சத்தின்மேனின்ற வனப்பு சாமிகள் திருவடிக் கண்ணே மீளாது நிற்பதாகவுமாயின்,

அங்கணுளபுங்கமானபோகமே எ-து அழகிய கண்ணுளா அரிபிரமாதிகள் போகங்களையும் கடந்திருப்பதான சிவானந்தபோகமே இந்தக் காருணியத்து கரு [ண](நா)யேனுற் கை(ம்)மாறு முண்டுகொலோ எ-று.

சிவத்தொடத்துவிதமானபடியினாலே நின்னொடுமென்னைப் புணர்ப்பதாக வென்றார். 'என்னொடும்' என்ற மூன்றனுருபை[வ](ப) 'என்னை,' என்னும் இரண்டனுரு[வ](ப)ாகக் கொள்க. 'உண்மைகளுமாயின' எனனுமாக்க முந் தொக்குநின்ற.

**Colophon:**

சத்து சித்துவானந்த (. . . . .) குருசுவாமியாகிய சரவணதேசிகன் திருவடித்தாமரை (. . . .) அதுவே மகாவாக்கியமென்று மிது முதலான வுண்மையெல்லா மனுக்கிரகஞ் செய்ததெனவறிக.

(கு-பு.)—

இந்நூல், சைவசாஸ்திரத்தைச்சேர்ந்ததென்று தோற்றுகிறது. அம்ம தா பெரியோர்கள் 'அத்வைதம்' என்பதற்குக்கொண்ட பொருள் இன்ன வென்பதை, குறுந்திரட்டு, தேவாரம், திருவாசகம், ஞானசதகம், சிதாகாச விலாசம், ஒழுவிலொடுக்கம், தேவிகாலோத்திரம் முதலிய பல நூல்களின் பிரமாணத்தால் சாதிப்பது. இது, திருப்போரூர் சிதம்பர சுவாமிகளாலும், திருவாவடுதுறை சிதம்பர முனிவராலும் செய்யப்பட்ட உரைகளிற் பல இட ங்களில் மேற்கோளாகக் காட்டப்பெறும் பிரமாண நூல்களுள் ஒன்று. சரவணதேசிகரின் சிஷ்யர்களில் ஒருவரால் இயற்றப்பட்டதாகத் தெரிகிறது இது. இந்தப் பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது.

## (b) கடாவிடையுபதேசம்.

## KAḌĀVIḌAIYUPADĒŚAM.

Foll. 14*a* –21*a*.

A treatise bearing on the principles of the Śaiva Siddhānta. It is in the form of suitable questions with appropriate replies and with quotations from various works. The author of the work appears to be Kandappadēvar or Kandamādhavan, a disciple of Śaravaṇadēśikar.

Complete.

**Beginning:**

காப்பு.

துரியாதீதப் பொருளா மெதிராறு வீட்டியவர்க்குத் துரிசற் றோங்க
அரியாதி தேவர்குழாந் தனையகலா மலமாயை யகன்று நீங்கப்
பிரியாத சனகாதி யவாககருளுஞ் சிவனுமையைய பிணைந்தாங் கீன்ற
அரியானை முகம்படைத்த வானந்த விநாயகனை வணககஞ் செயவாம்.

கந்தப்பதேவ கருதரு மனுபவ .
மென்றனக கறிய வியம்புக வென்றனு
மந்தக் கடாவினுக் கவனவிடை யுரைத்தது.

வறியவா காயம் போனறு வையகத் தொளிக ளன்றி
நெறியுடை மூ[ற்](ர்த்)தியாகி நிமலமாய நித்தமாகிக்
குறியறு மொளியா யொனருய்க கோதிலா வமுதமாகி
யறிவையுங் கடந்துநின்ற வறிவையா ரறிய வல்லார்.

என்றும்

கண்டறிவா ரில்லை[க] காயத்தி னந்தியை
எண்டிசையோரு மிறைவனென றே[ற்](த்)துவ
ரண்டங் கடந்த வளவிலா வானந்தந்
தொண்டர் முகந்த துறையறி யோமே.

என்றும் கூறியதறகு,

தொண்டா முகந்த துறையறி யும்படி
யண்டரு ளெனககென விறுபதற் குரைத்தது.

ஆலத்தி னுடுககள் காட்டி யருந்ததி காட்டுவாா போற்
றூலத்தின மரங்கள காட்டித் தனிபபிறை காட்டு வார்போற்
றூலத்தை முனபுகாட்டிச சூக்கம சொரூபமான
மூலத்தைப் பினபுகாட்ட முனிவரர் [து](தொ)டஙகினுரோ.

என்றும்,

ஆனைக்கை போலபின் [வ](ப)த்துவிதா னந்தமா
மோனத்தை வாக்குமன மூட்டுமோ—ஞானத்தாற்
காக்கை யிருந்த மனை கைமேற் பிறையென ற
வாக்கருதி னீசிவ மானவ

என்றுங்கூறியதற்கு,

நீசிவமாவை யெனநிகழ்த் தினை
நீசிவனுயிர் பசுவெனும் பெயர்செறிந்த
நான்சிவனுத லெங்ஙன நவிற்றுதி
கந்தசுவாமி யெனக்க ராவியதற்
கந்தச் சுவாமி அருளுட னுரைத்தது.

**End:**

சுமை கழிந்தது துன்ப மொழிந்தது
சமய சங்கழுந் த[ற்](ர்க்)கழு மற்றது
அமை யதின்ற வறிவை யறிந்தபின்
கமை பிறந்தது கல்வி கழிந்ததே.

என்றும்,

முத்தியு மிதுவே யாகு முடிவும்மே றில்லை யாகுஞ்
சித்தமு மிதுவே யாகுந் தெளிவுமே லில்லை யாகும்
பித்துமின் ஞெழிவே யாமேற் பேறிதற் கில்லை யாகு
மொத்திடு முடலுமிந்நா ளுறுவது மில்லையாமே.

என்றும்,

இது கடாவிடையுபதேசமீதுணர்ந்து
கதிவிருப்பின ராய்க் கருத் துறத்தெளியிற்
பதித ரஞ்ஞானப் பகைகயிரிந் தோட
வெதிரில் பே ரின்ப வீடெய்துமிங் கவர்க்கே.

என்றுங் கதியினைவியந்து கழறியதெனவறிக.

கடாவிடையுபதேச முற்றும்.

**Colophon:**

எண்ணிலாக் கற்பகோடி காலங்க ளெய்திய புண்ணியப் பயனால்
மண்ணிடைத் தோன்றிய மல பரிபாகம் வாய்ந்த மாதவர்க்கெலா மருளப்
புண்ணிய வடிவா யுதித்த மெ(ய்)ஞ் ஞானப் புனிதநற் சரவணதேவன்
கண்ணிடை மணியாய் வந்தருள் கந்த மாதவன் கடாவிடை யுரைத்தான்

(கு-பு.)—

இந்நூல் சைவசித்தாந்தத்தைச் சார்ந்தது. அம்மதத்திற் சில வினுக்கள் வினவி அவற்றுக்குத் தக்க விடைகள் கூறப்பட்டுள்ளன. ஞானவாசிட்டம் கைவல்லியநவநீதம் முதலிய நூல்களின் செய்யுட்கள் மேற்கோள்களாக எடுத்து ஆளப்பட்டிருக்கின்றன. சரவணதேவரருள்பெற்ற கந்தப்பதேவர் இயற்றினரென்று இதன் இறுதியில் உள்ள செயயுளால் விளங்குகின்றது. இது முற்றும் உள்ளது.

---

## (c) உபதேசவொருபாவொருபது.

## UPADÉŚAVORUPĀVORUPADU.

Foll. 21*b*—23*a*.

A treatise in Saiva Siddhānta explaining in ten stanzas that the individual souls which are immersed in the bondage of Saṁsāra on account of the three inherent evils, viz., egoism, Karma and Māyā, can hope to get salvation by the grace of Śiva.

Complete.

**Beginning:**

ஐயனனந்த ருத்திரேசனுஞ் சிவஞானப்பேர்
மெய்யனுங் கச்சியப்ப விமலனுந் தவப்பி[ற](ர)காசத்
துய்யனுஞ் சிதம்பரப் பேர்தோன்றலை நீயென்றேத்தும்
பொய்யனேன் பாவம்போ மாறு புகலுதி சொரூப வாழ்வே. (௧)
வாழ்ந்திடு முயிர்களெல்லா மருவுமும் மலத்தினாலே
ஆழ்ந்திடும் பி[ர](ற)வி தன்னி லம்மல மூன்றுநீங்கிற்
சூழ்ந்திடும் பிறவி நீங்கச் சொரூபமே தானுயதிற்கும்
வீழ்ந்திருண் மலங்க ணீங்கும் விரகினை விளம்பக் கேட்டி. (௨)

**End:**

என்றுநான் சீவனென்று மென்றுநா னுயிரேயென்று
நன்றியிற் பசுவேயென்று நவிற்றிடு கையினால் யானே
வென்றிகொள் சொரூப மேயாய் விளங்குவ தெவ்வா றென்று
துன்றிய வையங்கொள்ளல் சொரூபமே நீயாதல் செப்பும். (௯)
செப்புறு மாயையாலே சீவனீ மாயைநீங்கி
லொப்பறு மீசனீ யாமுயிரெனல் கன்மத்தாலே
தப்புறிற் கன்மங் கத்தாத் தனிமல பந்தத்தாலே
துப்பறும் பசுநீயோனுற் சொரூபநீ யையமின்றே. (௰)
சரவணதேசிகன் மலர்த்தாளிர வினுமேத்திடுவாம்.

(கு-பு.)—

இந்நூல் சைவசித்தாந்தத்தைச் சேர்ந்தது. இது, மும்மலங்களினால் பிறவியில் அழுந்தும் உயிர்கள் சிவனருளால் மலமற்றுச் சொரூபம் பெறுமென்பதைப் பத்துச் செய்யுட்களால் விளக்குவது. இதைச் செய்தவர் காஞ்சிபுரம் சரவணதேசிகரென்று தெரிகிறது. இதில் இது முற்றும் உள்ளது.

இந்நூல் பூர்த்தியானவுடன் சிவபெருமான் விஷயமான சில செய்யுட்கள் உள்ளன.

---

## (d) தவப்பிரகாசர் துதி.

## TAVAPPIRAKĀŚARTUDI.

Foll. 23b—26a.

A eulogy on Tavappirakāśar, a teacher of Śaiva religion: **apparently** by one of his disciples.

Complete in ten stanzas.

**Beginning:**

தேவனே போற்றி யெங்கள் தெய்வமே போற்றி யன்பர்
பாவனைக் கப்பா னின்ற பரமனே போற்றி பாசத்
தோவென வலறுமென்ற னுடல்பொரு ளாவி மூன்றுந்
தாவென வாங்கியாண்ட தவப்பிர காசா போற்றி. (௧)
தவப்பிர காசா நின்னைத் தமியனேன் மன(த்)தன்பத்
துவப்புற நினையும்வண்ண முறுதிதந் தருளிமேனு
மவப்பெரும் பிறவிநீங்கப் பரமஞா னத்தா லோங்குஞ்
சிவப்பிரகாசந் தந்துன் றிருவடி சேர்க்க வென்றே. (௨)

வாயினி லுதித்துமண்மேல் வளர்ந்தசெந் தமிழே நீபோய்த்
தாயினு மினிய வெங்க டவப்பிர காசற் போற்றிப்
பேயெனப் பிரிந்துழிதினைப் பெருந்துய ருற்றபேதை
வீயுறு தருளுவாயென் றுவிண்ணப்பஞ் செய்துகொள்ளே. (ரு)

**End:**

இலமிட் டிரங்கா நின்று வுறுதியில் புலைய னேனை
ஞாலமீ தளிக்க வந்த ஞானதே சிகனே போற்றிப்
பாலலோ சனங்கரந்து படிறனைத் தோட்கொள்ளத் (?)
தாலமேல் வந்த வெங்க டவப்பிர காசா போற்றி. (க)

போற்றியென் றேத்துமென்றன் புன்றலை மீதிலோங்க
நாற்றிசை புகழுந்தெய்வ நளினபா தங்கள் சூட்டிப்
பா(ற்)றரும் பாசம்போக்கிப் பகரும் பரபோ கத்திற்
சாற்றரு மின்பந் தந்தான் றவப்பிர காசத் தேவே.

திருச்சிற்றம்பலம்.

(கு-பு.)—

இது, தவப்பிரகாசரது தோத்திர ரூபமானது. இயற்றியவர் பெயர் முதலியன தெரியவில்லை. இந்தப்பிரதியில் இந்நூல் பத்துப்பாட்டும் உள்ளது.

---

## (e) வீட்டுநெறியுண்மை.

## VĪṬṬUNERIYUṆMAI.

Foll. 26a—31a.

A treatise on Śaiva Siddhānta laying down the mode of conducting one's self after learning through a proper Guru the means of obtaining salvation: by Śaravaṇadēśikar of Conjeeveram, who was a disciple of Kacciyappamunivar of Tiruvāḍuturai Mutt.

Complete.

**Beginning:**

காட்[டு]நெறி யிகடசக்கரகணபதி தாட்கதிபநளேகம்பவாணர்
ஈட்டருட்டாட் காமக்கோட்டத்துமைதன்னிலங்கொளித்தாளொழிற் குமார
கோட்ட.முறைகுமானற்றுணர்ந்திமுதற்குரவர் பொற்றுள்குழைந்து போற்றி
வீட்டுநெறியுண்மையினை விளம்புவ ஙிங்கவ ருளின் விளக்கங்கொண்டே.

இது வழி டுதெய்வ வணக்கம்

பொ(ா)னடி புவியிற் றோயப் பொலிகரு மழுமான்பால
மன்னு லோசனங் கரந்து வளங்கெழு துறைசை மேவி
என்னையாள் கச்சியபப[ர்வெ](ரெ)ழிற் குரு நாதாவென் னுட்
டின்னுபா சங்க ணீக்கித் துயரில் வீடருள்செய் வாயே. (க)

என்றபடி பணிந்துவாழ்த்தி யிரந்துள முருகி யே[ற்று](க்து)
நன்றியில் பாவியேற்கு நலனுற வருட்கண் சாத்தித்
துன்றுபா சங்கள்போக்கித் துயரில் வீடடையு மாறு
வென்றிகொள் கருணை[த]தன்னல் விளங்குற வருளிச் செய்தான். (உ)

தத்துவந் தெரிந்து நீக்கித் தனிமலங் கண்டு போக்கி
ஒத்திடு முனையுணர்ந்தங் குறைதது பொருளைநோக்கிச்
சுத்தமா மருளிற்போதந் தோன்றிடா தடக்கிற் றோன்று
மெத்துபே ரின்ப மேபாய் மேவுநீ யதுவீ டென்றே. (௯)

**End:**

எற்குறு வாசம் போக்கி யிடரொழித் தின்ப வீட்டி
னிற்குமா றருளிச்செய்து நிலைபெற நிறுத்தி யாண்ட
கற்குறா லோர(தி)மிக்கோங் காவடு துறைக்கச்சியப்ப
சற்குரு பாதம்வாழி தழைத்தன்னோ னருளும் வாழி. (௨௨)

ஈதொளி ருண்மைவீட்டு நெறி யிதை ஞான சான
லோதுறக் கேட்டுச் சிந்தித் துண்மையைத் தெளிந்து நிட்டைத்
தீதறத் தரமதாயே செறிந்துளோர்க் கன்புசெய்பு
மேதமி லடியர் வாழி யியம் பினூ லென்றும் வாழி. (௨௩)

**Colophon:**

வீட்டுநெறியுண்மை முற்றும்.

(கு-பு.)—

இந்நூல் சைவசித்தாந்தத்தைப்போதிக்கும் நூல்களுள் ஒன்று மோட்சம் அடைதற்கு உரிய வழியை ஞானசாரியன்பால் கேட்டு, சூழுகித்தெளியும் வழியைக் கூறுவது. இந்தப்பிரதியில் இது முற்றும் உள்ளது. திருவாவடு துறைக் கச்சியப்ப முனிவர் அருள்பெற்ற கச்சி-சரவணதேசிகரால் இயற்றப் பெற்றதென்றுதெரிகிறது.

---

## (f) சரவணதேவர் இரட்டைமணிமாலை.
## SARAVAṆADĒVAR IRAṬṬAIMAṆIMĀLAI.

Foll. 31*a*—34*b*.

Same work as that described under No. 270 of the D.C.T. MSS., Vol. I.

Complete.

(கு-பு.)—

இது டிஸ்கிரிப்டிவ் காட்லாக்கின் 270-ஆம் நம்பர் பிரதியைப்பார்த்து எழுதப்பெற்றது. இந்தப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது.

---

## (g) கைலாசநாதர்தோத்திரம்.
## KAILĀSANĀTHARTŌTTIRAM.

Foll. 35*a*—37*a*.

A poem written in praise of Kailāsanāthar, a form of Śiva, worshipped in the sacred shrine at Aiyanagar.

Complete in ten stanzas.

**Beginning :**

இதழிமலர்ப் பொலஞ் சடையும் விழிமூன் றுங் கமலமுக வெழிலும் வானோர்
துதிபெருகு கறை[யு]மிடறு மழுமானும் வரத (ம)பையந் துலங்கு கையு
மதிகவினை மலர்ப்பதமு மணைத்தருவுஞ் செக்கரொளி யழகு முள்ளம்
பதிதரவைத் தையனகர்க்கயிலாச நாத நினைப் பணிந்தின் பார் வாம். (௧)

ஆர்ந்த விருண் மலர்க்குழலு மருள்விழியு மதி முகமு மமையார் தோளுங்
கூர்ந்தகன தனமுமவா தபையமோ டங்குச பாசங் குலவுகையு
மோர்ந்தவிடு கிடையு மலர்ப் பதமு முடைக் கமலாட்சி வல்லி யிடமுமாகிச்
சேர்ந்தொளிரு மையனகர்க் கயிலாச நாத நினைத் தினஞ்சே விப்பாம்.

**End :**

தேவருல கனைய திரு வையனகர்க் கயிலையதி பதிநீ தந்த
வோவறுமுக் கரணத்தா லுனை நினைத் (துத்)து தித்தருச்சித் துய்ந்திடாமல்
மேவுமதை ய[ரு](ரி)வையர்க்கே விடுத்துமயல் கொண்டுழன்று விளி
[கின்(கி)றற்குன்
பூ[வெ]வலர்ச்செந் தாமரைத்தா ணீழலுறு நாளுமுண் டோ புகலுவாயே. (௯)

வாழ்ந்தவெழி னெஞ்சகநீ யையனகர்க் கயிலாய வள்ளல் பாற்போய்
மாய்ந்திடுவ னுனைப்பிரிந்து மயங்கியமா தெனவிளம்பி மாயாவண்ண
பீ[ய்]ந்திடுநீ யெனவாங்கி யொருநொடியில் வந்தெனக்கிங் கீவாய் பொற்குன்
றேய்ந்த வவனா புயத்தணிந்து விருகாத மொளிமணம்வீ சிதழித் தாரே. (௧௦)

(து-பு.)--

இது, ஐயனகர் கைலாசநாதர் பேரில் தோத்திரரூபமாக இயற்றப்பெற்ற தொரு நூல். இதை இயற்றியவர்பெயர் முதலின விளங்கவில்லை. இந்தப் பிரதியில் இந்நூலின் பத்துச்செய்யுட்களும் உள்ளன.

---

(*h*) பஞ்சாக்கரவநுபூதி.

PAÑCĀKKARAVANUBHŪTI.

Foll. 27*b*—39*b*.

A work on Saivism. It explains and amplifies the meaning and significance of the five-syllabled prayer formula, Śivāya Namaḥ, an understanding of which is held to be conducive to the realization of Śiva and which is inculcated herein as the best means of obtaining salvation. By Śaravaṇadēśikar, a disciple of Tavaprakāśar of Suvarkkapuram who was himself a remote disciple of Tirucciṟṟambalam of Ambarmākālam.

Complete.

**Beginning :**

பஞ்சாக்கர வனுபூதியை (ப்)பரிவா
லஞ்சுகர வன்னடி பணிந்து ரைப்பாம்.

பூமே லயனும் புவியளந் தோனுந்
தாமேல் கீழந் துருவாறித் தேடியு

மறியா ரா(கித்) திகைத்தனர் நிற்ப
நீடிய சூழ்சடை ராய்நிமிர்ந் தோங்கி
வேத முடிவினும் விளங்குயிர தமது
போத முடிவினும் பொருந்தும் பேரொளி
மும்மா யையினின் மு[கு](கி)ழ்த்துல கனைத்துந்
தம்மா(ல்) நடத்துஞ சதிர் கே[ா](ட்) டிருந்தும்
ஊர்பே ருருவ மொனறில தேனுங்
கா ர் முகின்மீ கண்(டு)டைட கொளளுஞ்
செம்பொன்மா மதிள்சூழ சிறப்பிற பொலியு
மம்பர்மா காளத் தமுங்கிய திருசசிற
றம்பலதேவ னனவி யாருயிரகட்
கிம்பாவீ டுதவும் எழிறபதி பகியா
யவபெரும் பகைகளை யகறறியின் பளிகரும்
தவப் பிரகாச னெனும்பெயர் சாத்தி
யஞ் ஞானந் தீரத் தழிவில் வீ டுதவு
மெனு ஞானந் திரு மேனியதாயக கொண்
டென போற்புவியி லெழுந்தரு ளியனை
யன்பொடு காணு தடியனேட் கவால்
வன்புளம் வைத்தே மனங் குழைந்(த)வரி
னனபிலா தேற்றிய தறிந்தறி யானபோல்
வரைவிலா துளிகரும வள்ளலா தலினு
லருகுற வழைத்தங கருட்கணு லுனககி
இதையத்து நாட்டத்து மெனறன சிரததும்
பதிவிதது பாதம் பழவினை நூறிக
கருமல மாறக கடைகணித் தருளி
உரிமையிற் பவமகற் றுண்மையைக் கேளென்
றஞசெழுத் தாகம மண்ண லருமறை
யஞ்செழுத் தாதி புராண மனைத்து
மானந்தத் தாண்டவ மாறு றகனற.

* * * *

விஞ்சுறு பிறபபற வீடுத வினனுல்
அனனவ னருளகொண் டவவனு பவத்தைப்
பனனுதும் பஞ்சாக கரவனு பூதியென
திருள்பவத் துண்மை யிடருற நூறித்
தெருள்வீட் டின்மைத் தேடுவா கேண்மின்
சிவாய நமவெனச செப்புமஞ் செழுததிற்
றவாதுறு பொருள்களைச சாற்றிடு வனைதான்.

**End :**

தரித்த விளககின சத்தியக கிரணத
தொளித்திடுங் கண்ணு மவவுயர் கிரணத்திற்
களித்துட னொன்றுய்க கலந்தது வாகு.
முப்பொரு ளுள்ளிட முதிர்கிர ணத்தோ
டொப்பிலி பானு வொளிர்ந்தது நினறே
பானுசிவம் பகா கிரண மதருளா

மூலமயில் கண்ணுமை தருமான் மா வாம்
விளக்கு திரோதை விளம்பிருண் மலமா
மளக்கரு மிப்பொரு ளளவைப் படியுட்
சிந்தனைசெய்து தெளிந்திடு மேலோர்
வந்தனை போய்ப்பர மாய்வாழ் குவரே.

பஞ்சாக்கரவனுபூதி முற்றும்.

சூககமாகு மஞ்செழுத்தினிற் சுற்றியபாச
வீக்கநீக்கிமெய் யானந்தம் விளைநிலத் துய்த்துப்
போக்கும் மீட்சியுட் புறம்பிலாப் பூரணவடிவ
மாக்கினு ளொருசிவகம் போல்வரு மண்ணல்.

உவப்புறுமஞ் செழுத்தினையு மோரெழுத்தி னடக்கியவற் றுண்மைகாட்டிச்
சிவப்பிரகா சத்தடியேன் சிறுபோத மறவொழிதருச் சிவபோகத்திற் [ன்
பவப்பெருக்க மறவொழித்திங் காண்டருளும்பே ரருட்குப் பகர்வகம் மாறெ
றவப்பிரகா சக்குருவே யம்பர்மா காளமுறை தனிப்பொற் குன்றே.

அழகியவெந் திருச்சிற்றம் பலவ னென்கோ
வருள்வடிவா மேகநா யகனே யென்கோ
பழுதில்புகழ் வயித்திய லிங்க தேவ னென்கோ
பணிபவர்கட் கருள்கருணை நிதியே யென்கோ
ஒழிவிலரு ளானந்த வும்ப னென்கோ
ஓங்கருளார் சச்சிதா னந்த னென்கோ
எழில்சுவர்க்க புரத்தவப்பிர காசா நின்னை
யாவனெனத் தொழு திறைஞ்சி யே[ற்று](த்து) கேனே.

(கு-பு.)—

இந்நூல் சைவசமயத்தைச் சார்ந்தது. 'சிவாயநம' என்னும் ஐந்தெழுத்துக்களுக்குப் பொருள் இன்னவென்பதும் அவற்றையறிந்து சிவத்தை அனுபவித்தல் சிறந்ததென்பதும் ஆகிய இவற்றைக் கூறுவது. இந்தப்பிரதியில் இந்நூல் முற்றும் உள்ளது சுவர்க்கபுரம் தவப்பிரகாசரருள் பெற்ற சரவணதேசிகரால் இயற்றப்பெற்றதென்று தெரிகிறது.

இதன் பின்பு இரண்டு ஏடுகளில் கந்தரனுபூதி, தேவாரம், சைவசமயநெறி முதலியவற்றிலுள்ள சில செய்யுட்கள் எழுதப்பெற்றுள்ளன.

---

## (i) பஞ்சமலக்கழற்றி.
## PAÑCAMALAKKALARRI.

Foll. 42b—43a.

Five stanzas laying down the means of removing the five kinds of evil impediments that prevent the soul from getting salvation. In addition to the three inherent evil impediments referred to in sub-division (c) of this number two other evils are referred to herein, viz., the veil which prevents the soul from seeing things aright, and the resulting Māyā which is itself the product of Māyā. From the last stanza the author is made out to be Palanimāmunivar, a disciple of Śivaprakāśa Aiyar.

Complete.

**Beginning:**

நிலையிழுத்தல் கேவலமா மெனறறிந்து நின்றான்
தலையிழவா வுண்மை தலைபட்—டெலையழியக்
கைவந்தா லன்றோ கடற்காழி வள்ளலே !
பொய்வந்த வாணவந்தான் போம். (௧)
காயமு மெல்லாக் கரண(மும்) கன்மமுநுகர்
தேயமும் போகத்தின் செயதியும்—நீயாகத்
தேறினு லன்றோ சிரபுரம்வாழ் வள்ளலே !
மாறவேன மாயா மலம். (௨)

**End:**

அனுகிரக மாதியா வைந்தொழிலு மன்றி
ம[னு](ன)க்கிரிலை[க](ய) யத்தனையு மாற்றித்—தனுக்கழன்று
போமாகி லன்றோ புகலிநகர் வள்ளலே !
மாமாயை நீங்கு மது. (௫)

**Colophon:**

அறையுமொரு பத்தாட்சி யாண்டாடி மாசத்
திறைவன திருவா திரையிற-றுறைசை
சிவப்பிர காசையன் திருவடியைச் சேர்ந்தான்
தவப்பழனி மாமுனிவன் றான். (௬)

திருச்சிற்றம்பலம்.

(கு-பு.)—

இந்நூல் சைவமதசம்பந்தமானது. ஆணவம், மாயை, கன்மம், திரோதாயி, மாயேயம என்னும் ஐவகைமலங்களும் நீங்கும் உபாயங்கள் இன்னவெனக் கூறும் ஐந்துவெண்பாக்களாலாகியது. நூலாசிரியர் சிவப்பிரகாசையரின் சிஷ்யர்களில் ஒருவராகிய பழனியாமுனிவரென்று இந்நூலின் இறுதியிலுள்ள வெண்பாவால் தெரிகின்றது. ஒவ்வொரு வெண்பாவும் சீகாழிவள்ளலே ஒரே முன்னிலையாக அமைத்து இயற்றப்பட்டுள்ளது. இந்தப்பிரதியில் முற்றும் இருக்கிறது.

இந்நூலின் பின்னர், சிவஞானபோதம், திருவண்ணாமலை ஐயர் தசகாரியம் முதலிய நூல்களினின்றும் சிலசெய்யுட்கள் எழுதப்பெற்றுள்ளன.

---

## (j) வேதகிரீசர்துதி.

## VĒDAGIRĪŚARTUDI.

Foll. 44*a*—47*b*.

A poem in praise of God Śiva worshipped in the sacred shrine at Vēdagiri in Tirukkaḻukkunṟam in the Chingleput district: by Cidambarsvāmigaḷ of Tiruppōrūr.

Complete.

**Beginning:**

மேருவிலாயதி ஞணரவா யொரு வெங்கணை
மாலரி யாய்விரி தலையுல கந்தேரா யதிலுறுமிகு சகர மிருசுடராய
ஆரணநாலும் பரியா யம்புய னமைவுற சாரதியாய்
அவைநீ யுற்றிக லழியா முப்புர மட்டிடு ம[ன்று](ந்தா)னல்

சீருறு மூவர்க ளழியா துன்னடி சேரா நின்றனரால்
சிந்தையி லுன்னை மறவா தவர்தமைத் தேறுவ ரெவரேகாண்
வேரி நறுந்தொடை மூரதொரு பங்குறை வெற்பே! கற்பகமே!
வேதகிரிப்பவ ரோகவயித்திய வேணிமுடிக் கனியே! (க)

ஆயுதாந் தனிவேயும் பொழுதமைம் பேரிடராகு
மகிதலத் துறுசிறு குழவிப் பருவத் தறியாமையி னிடரா
மேயகுமாரத் திடர்கா மத்தா லெழின் மனை சுதரென வே
யெயும்பொழுது மிடர்பிணி யாலிட ரிலதா மிடிவந்தால்
காயும் பசியா லிடர்பின் னரைதிரை காணுறு போதுமிடர்
கால னுதித்திடு போதுறு மிடரை(க்) கடவுணீ யறிவாய்
மேய விடற்கடன் மூழ்கு மெனைச்சுக வேலையி னீவைப்பாய்
வேதகிரிப்பவ ரோகவயித்திய வேணிமுடிக் கனியே. (உ)

**End:**

வீடென் றறைதரு சொற்குப் பொருளோ விடுதலை யாதலினாற்
வீக்குண் டோனுங் கட்டொமாக விளங்குந் திடமாகப்
பீடுறு கட்டுத் தானும் விட்டுப் பெயரா திருசடமாம்
பிணிபட் டோன்சுதந் தரனு மப்பிணி பெயரச் செய்வோன்
நீடு சுதந்தர முளனு மொருவ னேருமில் வேதவினால்
நிகழ்பதி பசுபா சம்மென முப்பொரு ணிச்சய மென்றருளி
வேடனை வெல்லுங் குருவா யெனையாள் மெய்ப்பொரு ணீயன்றோ
வேதகிரிப்பவ ரோகவயித்திய வேணிமுடிக் கனியே. (க0)
சரவணபவனெ(னை)சசார்ந்த துணையே.

**Colophon:**

தத்துவப் போர்வை பிரித்துமா னீக்கிச்
சகலகே வலந்தனை தாவி
உ[த்தி](ற்றி)ரு பாலுஞ் செனநிடர் [று](கா)ப்பு
னுறைதலே யுண்மையென் றருளிசேர்
சுத்தமா மறைகள் செப்பிடு மதனை(த்)
தேரினு முணதரு ளில்லார்
சித்தநே ரொருக்கி யடைவரோ[யி] (வி)ன்பஞ்
சிதம்பர தேவசின் மயனே.

(கு-பு.)—

இந்நூல், வேதகிரித்தலத்து எழுந்தருளிய சிவபெருமான் தோத்திர ரூபமாக அமைந்தது. இவ்வழகியநூலை இயற்றியவர் திருப்போரூர் சிதம்பர ஸ்வாமிகள். இந்தப்பிரதியில் இது பூர்த்தியாக உள்ளது.

இதன்பின்பு ஞானவிஷயமான பாடல்கள் மூன்றும், ஆனந்த நடராசர் விஷயமான பாடலொன்றும், நாகநாதர் விஷயமான பாடலொன்றும் ஆக ஐந்துபாடல்கள் ஓரேட்டில் எழுதப்பெற்றுள்ளன."

---

(k) தசக்கிரமக்கட்டளை.

DAŚAKKIRAMAKKAṬṬAḶAI.

Foll. 49a—74a.

A treatise purporting to explain the ten-fold characteristic qualities relating to each of the five principles of the Śaiva Siddhānta, viz., soul, certain inherent impediments preventing the soul from getting salvation known as Malam, Karma, the Lord and Upādāna. The author supports his statements by means of quotations taken from various sources, such as, Tiruvācakam, Śivañānabōdam, etc.

Complete.

**Beginning:**

உயிர், மலம், கன்மம், கர்த்தா, உபாதானம் என்று சொல்லிய மெய்ப்பொருளைந்துக்கும் உருவம், சொரூபம், சுபாவம், விசேடம், வியாபகம், வியார்த்தி, குணம், வன்னம், தெரிசனம், சுத்தி என்கிற பத்துகக்கிரமமும் எதுவென்று வினவுவார்க்கு அது விளங்கவேண்டிக் கூறில் விரியும். விரிவஞ்சிப் பொதுவாகவுஞ் சிறப்பாகவும் அஃதொரு பிரகாரங்காட்டுதும் :—

பதி, பசு, ஆணவம், கன்மம், மாயை ஆகு ஐந்து பொருளுக்கும் உருவமாதியாக(ச்) சுத்தியந்தமாகப் பத்தும் பொதுவாய் வருமாறு :—

ஐந்துக்கும் உருவமாவது : தோற்றம், ஒடுக்கம், மற்றும் அறுதியாதல் (க)

சொரூபமாவது : தத்தம் குணங்கள் அனேகவிதமாய் விரிந்தும் ஒடுங்கியும் விரிதல் குவிதலற்றுக் குணிமயமாய் நிற்றல். (உ)

சுபாவமாவது : என்றுங்கெடாது நித்தியமாதல். (௩)

விசேடமாவது : என்றும் அப்பிரமேயமாதல். (௪)

வியாபகமாவது : பெத்த முத்திகளிற் பற்றுதல்விடுதலுடைத்தாயிருந்தும் ஏகதேசப்படாதிருத்தல் (ரு)

வியார்த்தியாவது : ஒன்றுக்கொன்று மறுதலைப்பொருளாயினும் ஒன்றிருக்கும் இடத்து ஒன்று இருப்புவிடாமலும் தத்தம் இலக்கணம் கலவாமல் நிற்றல். (சு)

குணமாவது : தனித்தனி அனேகம் தாதான்மிய சத்திகளை யறுதியே யுடைத்தாதல். (எ)

வன்னமாவது : எந்தப்பொருளேனும் தன்னுடனே சேர்ந்ததைத் தன் வன்னமேயாக்குதல். (அ)

தெரிசனமாவது : ஐந்துபொருளும் என்றும் அத்துவிதமாயே இருத்தல். (கூ)

சுத்தியாவது. குணியானது குணத்துடனே கூடிப் பிரபஞ்சம் விரிந்துங் குணமானது குணியுள் அடங்கிப் பிரபஞ்சமொடுங்குதல். (க0)

மெய்ப்பொருளைந்துக்கும் பொதுவாய்க்கூறிய உருவமாதி பத்துஞ்சரி.

இதற்குச் சுருதிவருமாறு :—

திருவண்ணமலையயர் தசகாரியம்.

"ஒப்பிலா நி[று](ரு)விகார மொருவழிக் குணங்கலப்புச
செப்பிய சுதந்தரஞ் சி[ற்](ர்) சீர்முதற் சமானஞ்சேரா
தப்பிலா விபுவி னைசஞ் சமாதத்வ தயறுதிசத்தி
அப்பிர மேய மற்று மைந்திற்குஞ் சமானமாமே."

என்றும்.

"முதற்பதி யானே யைந்து முன் னத்துவித மிரண்டே
இதற்பின்னே யனுமானத்தா லெண்ணிலா வுயிர்கள் மூன்றே
அதற்பின்னே யவசதைநான்கே யகமறுத் திடலே யைந்தே
செதற்பதி பிரித்த லாறே தெரிவித்த லுயிரை யேழே."

என்றும் வருமது கண்டுகொள்க.

பொது முற்றும்.

பதித்தன்மை.

**End:**

திருவாசகம்.

"காணுங் கரணங்க ளெல்லாம் பேரின்ப மெனப்
பேணு மடியார் பிறப்பகலக்—காணும்
பெரியானை நெஞ்சே பெருந்துறையி லென்றும்
பிரியானை வாயாரப் பேசு."

என்றும் வருமதுகண்டுகொள்க.

**Colophon:**

மெய்ப்பொருளைந்தின் தசக்கி[ற](ர)மக் கட்டளைமுற்றும்.
கச்சியப்பதேவனடி யுச்சியுளவ் வைப்பாம்.

* * * *

மன்னியதோ ரஞ்ஞானந் தனையறியா ததுமறைப்பா வரணமாகும்
பன்னியவிட் சேபமெனத் தென லா[ர்](ப்)த வாக் கியமே பரோக்ஷஞானந்
தன்னிலே தா னெனதுவே யபரோக்ஷங் கண்டதொரு சந்தோ ஷத்தி
(னி)ன்னிலையே து(வந்தமுப)போ யானந்த மடைவதுயே ழவத்தைப்
பேரும்.

(கு-பு.)—

இந்நூல் சைவ சித்தாந்தத்தைச் சார்ந்தது. 'உயிர்' முதலாக, 'உபாதானம்' ஈறாகவுள்ள மெய்ப்பொருள் ஐந்திற்கும், 'உருவ' முதலாகச 'சுத்தி' ஈறாகக் கூறப்பட்ட கிரமங்கள் இன்னவை என விளங்கக் கூறுவது. திருவாசகம், சிவஞானபோதம், சிவஞானசித்தியார் முதலிய நூல்களின் பல பாடல்கள் மேற்கோள்களாக இதன் இடையிடையே எடுத்தாளப்பட்டுள்ளன. இது வசனநடையிலாயது. பொது, சிறப்பு என்னும் இரண்டு பெரும் பிரிவினையுடையது. நூலாசிரியர் பெயர் முதலியன விளங்கவில்லை. இதுவரையில் இந்நூல் அச்சிடப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. இந்தப்பிரதியில் இந்நூல் முற்றும் இருக்கிறது.

---

## (l) சரவணதேசிகர்தோத்திரம்.
## ŚARAVAṆADĒŚIKARTŌTTIRAM.

Foll. 74b—75b.

A eulogy on Śaravaṇadēśikar, a teacher of Śaivism, who lived in Conjeeveram.

